# ஸ்ரீ ஆறுமுக நாவலரின் கல்விப் பணி

**[நல் - முருகேச முதலியார்]**

ஸ்ரீ ஆறுமுக நாவலரின் சமயப்பணி, தமிழ் இலக்கியப்பணி இவைகளை விட, அவரது கல்விப்பணி மிகச் சிறந்தது. எதிர்காலத்தை உணர்ந்து நிலைத்து நிற்கும் சேவை புரிபவர்களே தீர்க்கதரிசிகளும், உலோகா பிமானிகளும் ஆவர். ஆங்கிலப் படிப்பு தலை தூக்கியிருந்த அந்தக்காலத்தில் அவர்கள் சைவக் கல்வியை நல்க பல முயற்சிகளில் ஈடுபட்டு வேற்றியையும் கண்டார்கள். 1846ம் ஆண்டிலேயே தாம் வசித்து வந்த இடத்தில் சில பிள்ளைகளைச் சேர்த்து இரவிலும், காலையிலும் வேதனம் பெறாது கல்வி கற்பித்தார். சதாசிவப்பிள்ளை, நடராசய்யர், ஆறுமுகப் பிள்ளை போன்ற மாணவர்கள் தமிழிலும் சைவ சித்தாந்தத்திலும் தேர்ச்சி பெற்று, பின் கல்வி நல்கும் பணியில் ஈடுபட்டார்கள். நாவலர் ஏற்படுத்திய யாழ்ப்பாண சைவப் பிரகாச வித்தியா சாலையில் பொன்னம்பலம் பிள்ளை, செந்தில்நாதய்யர் போன்ற விற்பன்னர்கள் ஆசிரியர்களாகப் பணி செய்தார்கள். அந்தக் காலத்தில் சைவத்தின் பெருமையை அறியாத மக்கள், குருட்டு வழக்கங்களிலும், அல்லது பரசமய பாதிரிமார்கள் வசத்திலும் சிக்கி வாழ்வை அவலமாக்கும் சூழ் நிலையில் இருந்தார்கள். இவைகளைக் கண்டும் கேட்டும், குருமார்களும், வித்து வான்களாக இருந்தவர்களும் தடுக்க ஒரு முயற்சியும் எடுக்காதிருந்தார்கள். இதைக் கண்டு நாவலர் மனம் நொந்தார்.

1868 - ஆம் ஆண்டு "சைவ சமயிகளுக்கு விக்கியாபனம்" என்ற ஒரு விண்ணப்பத்தை விடுத்தார். அதைப் பார்த்தால் நாவலரது ஆர்வம் நன்கு விளங்கும். மனமும் உருகும் சமய வளர்ச்சிக்குக் கருவியாகிய கல்வியை வளர்ப்பதற்காக, தாம் நல்ல மூலதனம் தரும்படியான உத்தியோகங்களை விடுத்தும் திருமணம் செய்து கொள்ளாமலும் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

"சைவ சமயத்தின் கண்ணதாகிய பேராசையை அதனை முடித்தற்குச் சிறிதும் சத்தியில்லாத எனக்குத் தந்தருளிய சிவபெருமான், சத்தியையுடைய மற்றையோர் களுக்குக் கொடுத்தருளினாரில்லையோ என்று இரவும் பகலும் பெருங் கவலை கொண்டு பெருமூச்செறிதலும், பலருக்குப் பிதற்றுதலினுமே பெரும்பான்மையும் என் தாபத்தைப் போக்குவேனாயினேன்" என்று எழுதியுள்ளார்.

யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையில் சைவப் பிரகாச வித்தியாசாலை 1848ல் துவக்கப் பெற்றது. கையில் பண மில்லாமையினால் பிடியரிசி தண்டிச் சேர்க்கும் பொருளைக் கொண்டு பள்ளியை நடத்தினார். பணக் கஷ்டத்தால் மனம் வருந்தி ஒரு நாள் தாம் சிவ பூசையிலிருக்கும்போது தம் உடையநாதனை நோக்கி அழுது ஒரு செய்யுளாக வீண்ணப்பம் செய்து தம் உயிரைத் துறப்பதாகப் பாடி தைந்தார். அது ஒரு அழகிய பாட்டு. அடியார்க்கு ஆர முதான ஈசனும் கை விடுவாரோ? அன்று எதிர்பாராத வண்ணம் ஒரு அன்பரிடமிருந்து ரூ. 400 வந்து சேர்ந்தது!

# ஸ்ரீ ஆறுமுக நாவலைன் கல்விப் பணி

திவ்வியத்தலமாகிய தில்லையிலே ஒரு பெரிய சைவ வித்தியாசாலையும் மடமும் ஸ்தாபிக்கக் கருதி, நாவலர் ஒரு விக்கியாபனம் விடுத்தார். இதில் வெகு ஆர்வமுள்ள கருத்துக்களையும், பாடசாலை நடத்த வேண்டிய முறை களைப் பற்றியும் தெரிவித்துள்ளார். தமிழ் நாடெங்கும் அத்தகைய பாடசாலைகள் ஏற்படுத்த வேண்டுமென விரும்பினார். சிதம்பரத்தில் பெரும்பாலும் யாழ்ப்பாணத் தன்பர்கள் கொடுத்த பண உதவியினால் 1864 - ஆம் ஆண்டு பாடசாலை துவக்கப் பெற்றது. மயூரம் வேதாரணியம் முதலிய தலங்களிலும் பாடசாலைகள் அமைக்க வேண்டு மென்று நாவலர் மிகவும் ஆசைப்பட்டார். 1870 - ஆம் ஆண்டில் மீண்டும் ஒரு விக்கியாபனம் விடுத்தார். ரூபாய் 80000 மூலதனமாகவும், மாதவருவாய் ரூ. 700 ம் வேண்டு மெனக் குறிப்பிட்டார். " நிலையில்லாத என் சரீரம், உள்ள பொழுதே என் கருத்து நிறைவேறுமோ'... " ஏழை சொல் அம்பலத்துக்கேறுமோ" என்றெல்லாம் விண்ணப் பித்துள்ளார்.

யாழ்ப்பாணத்தில் கிறித்துவ மிஷன் பள்ளியில் சைவ மாணவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்களினால், பலர் வேண்டுகோளுக்கிணங்கி வண்ணார் பண்ணையில் (1872 ல்) ஒரு சைவ - ஆங்கில வித்தியாசாலை ஏற்படுத்திப் பணக்கஷ்டத்திலும் நான்கு ஆண்டுகள் நடத்தினார். நாவலர் ஏவுத லினால் கொழும்புத்துறை, கந்தமடம், பருத்தித்துறை) மாதகல், இணுவில் முதலிய இடங்களில் வித்தியாசாலைகள் ஏற்படுத்தப்பட்டன. யாழ்ப்பாணத்திலும், சிதம்ப ரத்திலும் தம்மாலேயே ஏற்படுத்தப்பட்ட பாடசாலைகள் சிறந்தவை. சிதம்பரம் பாடசாலை தம் காலத்துக்குப் பின், தனது மாணவரான சதாசிவம் பிள்ளையவர்களால் மிக பயபக்தியுடன் நடத்தப்பட்டது. இந்தப்பள்ளி தமிழ் நாட்டில் நாவலர் தொண்டின் அழியாத அடையாள மாகும்.

இவ்வாண்டு சிதம்பரம் பாடசாலையின் 100 - ஆம் ஆண்டு பூர்த்தி 26 - 11 - 1964 ல் நடைபெற்றது. நாவலரவர்களின் 85 - ஆம் குருபூசையில் நான் தலைமை தாங்க இருந்தேன். புண்ணியக் குறைவினால் தடைபட்டது. எனவே இந்தக் கட்டுரை மூலமாக என் அஞ்சலியைச் செலுத்துகிறேன்.

ஸ்ரீ நாவலரவர்களின் விக்கியாபனங்கள் பொன்னெ முத்தில் பொறிக்கத் தகுந்தவை. அவைகளைப் படிக்கும் போது என் மனம் ஏங்குகிறது. நமது சைவ சித்தாந்த மகா சமாஜம் எத்தனையோ நல்ல பணிகளை இதுகாறும் செய்து வந்துளது. சென்னையில் ஒரு சைவ வித்தியா சாலை ஏற்படுத்தினால் மிக நல்ல தொண்டாகும். பள்ளி நேரமில்லாத காலை, மாலைகளில் இளஞ்சிறார்களுக்குச் சமய பாடங்களை முறையே, பண்புடைய ஆசிரியர்களால் தினமும் போதிக்கப்பட்டு வந்தால் நலமாகும். இதற்கு அரசாங்க உதவி தேவையில்லை. பெரிய யாதாஸ்துகளின் பேரில் (ஸ்ரீ பிரகாச ரிப்போர்ட்) நடவடிக்கைகள் எடுக்கும்வரை தாமதிக்கவும் வேண்டியதில்லை. இந்த யோச னையை நமது அடுத்த கோவை மாநாட்டில் சிந்திப்பது நல்லது.

இந்த ஏழை சொல் அம்பலத்துக்கு ஏறுமோ! இறைவன் அருள் வேண்டும்.

சித்தாந்தம் - 1964 ௵ - டிசம்பர் மீ